

# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்

“ ஒருவர் ஞானியாக இருந்தாலும் சரி, அஞ்ஞானியாக இருந்தாலும் சரி அவருடைய உணர்வுகள் அனைத்தும் தங்கச் சூடு போன்றதே. நமக்கு ஏற்படும் அத்தனை உணர்வுகளின் ஆயுளும் வெறும் அரை வினாடியே.

தனக்கு வரும் உணர்வுகளுடன் போராடி, அஞ்ஞானி அதை புதுப்பித்து கொள்கிறான். அதனால் அந்த உணர்வு அவனிடம் நீண்ட நேரம் தங்கிவிடுகின்றன. ஆனால் ஞானி அதனைப் புதுப்பித்து கொள்வதில்லை. அதனால் அவருக்கு வரும் எந்த உணர்வும் அவரிடம் தங்கி இருப்பதில்லை.



– ஸ்ரீ பகவத்

## சென்னையில் ஒரு நாள் ஞான முகாம்

**நாள்** **05.04.2020** ஞாயிறு காலை 9.00 மணி முதல் மாலை 6.00 மணி வரை

**இடம்** **ICSA Programme Centre**
107, ஜீவன் ஜோதி ஹால், பாந்தியன் சாலை,
(எழும்பூர் அருங்காட்சியகத்திற்கு எதிரில்) எழும்பூர், சென்னை.

விபரங்களுக்கு **+91 8838229095, +91 98843 48800, +91 96000 29023**

**கோடையில் இயற்கை சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள்**

## சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 30-4-2020 வியாழக்கிழமை மாலை 4 மணி முதல்
3-5-2020 ஞாயிறு மாலை 3.00 மணி வரை

- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு **ரூ. 5000**/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் மார்ச் 31ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் :
A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் :
Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : **79041 18421, 99942 05880, 97891 65555**

### உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath
Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் என்ன வேறுபாடு ?



- ஸ்ரீ பகவத்

அன்பர் ஒருவர் ஒருமுறை கேள்வி ஒன்றைக் கேட்டார்.

"ஒருவருக்கு அவரை அறியாமல் கோபம் ஏற்பட்டு விடுகிறது; அல்லது துயரம் ஏற்பட்டுவிடுகிறது. இப்படி ஏதாவது ஓர் உணர்வு ஞானிக்கு ஏற்பட்டால் உடனடியாக மறைந்து விடும் என்றும், அஞ்ஞானிக்கு ஏற்படும் பட்சத்தில் அந்த உணர்வுகள் உடனடியாக மறையாமல் நெடுநேரம் நீடித்து இருக்கும் என்றும் கூறப்படுகிறதே, அப்படித்தானா?"

அந்த அன்பருக்கு அது சம்மந்தமாக விளக்கம் அளிக்கப்பட்டது.

"ஞானியின் கோபம் தங்கச் சூடு, அஞ்ஞானியின் கோபம் இரும்புச் சூடு" என்று ஒரு வாசகத்தை கூறுவார்கள்.

அது என்ன தங்கச் சூடு?

அது என்ன இரும்புச் சூடு?

தங்கத்தை உருக்கி கட்டியாக்க முயற்சி செய்கிறார்கள் என வைத்துக் கொள்வோம். அப்படி உருக்கிய தங்கத்தை தண்ணீரில் போடுவார்கள். அதைத் தண்ணீரில் போட்டுவிட்டு, அதற்கு பின்பாகவே தொடர்ந்து கையை விட்டு அந்தத் தங்கத்தை எடுத்துக் கொள்ளலாம். தண்ணீரில் போட்ட வினாடியிலேயே அந்த தங்கத்தின் சூடு, தங்கத்திலிருந்து மறைந்துவிட்டிருக்கும்.

ஆனால் இரும்பினுடைய நிலைமை அப்படி அல்ல. இரும்பைப் பழுக்கக் காய்ச்சி ஆயுதமாக்க அதனை அடிப்பார்கள். அப்படி அடித்து ஆயுதமாக்கிய பின் அதனுடைய சூடு நீங்குவதற்காக அதனை தண்ணீரில் போடுவார்கள். உடனடியாக தங்கத்தை எடுத்ததைப் போல இதனையும் அப்படி உடனே கையை விட்டு எடுப்போமாயின், நமது கை பொசுங்கி விடும். இரும்பின் சூடு தங்கத்தைப் போல் உடனடியாக மறைவதில்லை.

அது மறைவதற்கு சற்றுத் தாமதமாகி விடும்.

ஞானியின் கோபம் உடனடியாக மறைந்து விடும்; அஞ்ஞானியின் கோபம் மறைவதற்கு தாமதமாகும் என்ற கூற்று ஓரளவுக்குதான் உண்மை. அதன் நுட்பம் வேறுவிதமாக அமைந்துள்ளது.

ஒருவர் ஞானியாக இருந்தாலும் சரி, அஞ்ஞானியாக இருந்தாலும் சரி, அவருடைய உணர்வுகள் அனைத்தும் தங்கச் சூடு போன்றதே. நமக்கு ஏற்படும் அத்தனை உணர்வுகளின் ஆயுளும் வெறும் அரை வினாடியே.

இருவருக்குமே இப்படிதான் நிகழ்கின்றன.

பிறகு இருவருக்கும் என்னதான் வேறுபாடு?

தனக்கு வரும் உணர்வுகளுடன் போராடி, அஞ்ஞானி அதனைப் புதுப்பித்துக் கொள்கிறான். அதனால் அந்த உணர்வுகள் அவனிடம் நீண்ட நேரம் தங்கி விடுகின்றன.

ஆனால் ஞானி அதனை புதுப்பித்துக் கொள்வதில்லை. அதனால் அவருக்கு வரும் எந்த உணர்வுகளும் அவரிடம் தங்கி இருப்பதில்லை.

நமக்கு வரும் உணர்வுகள் யாவையும் இடியோசையைப் போன்றதே.

அது என்ன இடி ஓசை? இடி ஓசைக்கும் உணர்வுகளுக்கும் என்ன சம்பந்தம்?

இடி ஓசை என்பது நம் அனைவருக்கும் தெரியும். இடி ஓசைக்கு பயப்படாதவர்கள் எவரும் இருக்க முடியாது. வானமே இடிந்து நமது தலையில் விழுந்து விடுவதைப் போல் அந்த இடி ஓசை இருக்கும்.

அர்ஜுனன் பெயரைக் கூறினால் தங்களுடைய தலையில் இடி விழாது என்று கூறி, இடி முழங்கும் போது "அர்ஜுனா, அர்ஜுனா" என்று பலரும் ஜெபம் செய்வதைக் கூட நாம் பார்த்திருக்கிறோம்.

கண்களைப் பறிப்பதைப் போல் மின்னல் ஒளி வீசும். மின்னல் ஒளியைத் தொடர்ந்து சில வினாடிகளிலேயே வானமே வெடித்துச் சிதறுவதைப் போல் இடி ஓசை ஏற்படும். மின்னல் வெட்டிய உடனேயே பலரும் காதுகளைப் பொத்திக் கொண்டு அர்ஜுனன் பெயரை ஜபித்து விடுவார்கள்.

இடி ஓசையிலும் சில அறிவியல் உண்மைகள் உள்ளன. எந்த இடி ஓசையை நாம் கேட்கிறோமோ, அந்த இடி நமது தலையில் விழுவதற்கு சாத்தியமே இல்லை. அது நம் மீது விழுவதாக இருப்பின் அந்த மின்னலோடு நம் மீது விழுந்திருக்க வேண்டும்.

மின்னலுக்குப் பிறகு ஏற்படும் இடி ஓசை என்பது நடந்து முடிந்த ஒன்றே. மின்னலோடு அந்த நிகழ்வும் முடிந்து விடுகிறது.

நமக்கு ஏற்படும் உணர்வுகள் அனைத்தும் முடிந்து போன உணர்வுகளே. நமக்கு ஏற்படும் உணர்வுகளை நாம் அடையாளம் கண்டு புரிந்து கொள்ளும்போது அவை முடிந்து போயிருக்கின்றன.

நமது உணர்வுகள் அனைத்துக்கும் நமது நினைவுகள்தாம் காரணம். நமது நினைவுக்கேற்ற உணர்வுகள்தாம் நம்மிடம் வெளிப்படுகின்றன.

நாம் ஓர் ஆபத்தில் இருப்பதாக நம்முடைய நினைவு அம்சம் புரிந்து கொள்ளும்போது, அது நமக்கு பய உணர்வையோ அல்லது ஒரு பரபரப்பு உணர்வையோ

ஏற்படுத்தி விடுகிறது.

நம்முடைய நினைவுகளைப் பற்றி நமக்குத் தெரியும். நமக்கு ஏற்படும் சிந்தனைகள் யாவும் அலை அலையாகப் புதிதுபுதிதாக வந்து கொண்டிருப்பது நமக்குத் தெரியும்.

புகைந்து கொண்டிருக்கும் ஓர் ஊதுபத்தியில், புதிது புதிதாக புகை எப்படி வந்து கொண்டிருக்கின்றதோ அப்படிதான் நம்முடைய சிந்தனைகளும் புதிதுபுதிதாக வந்து கொண்டிருக்கின்றன.

நினைவுகள் எப்படிப் புதிது புதிதாக வந்துகொண்டிருக்கின்றனவோ, அப்படி அந்த நினைவுகளின் காரணமாக எழுந்த உணர்வுகளும் கணந்தோறும் புதிது புதிதாக இருக்கின்றன.

நாம் ஒரு கனவு காண்பதாக வைத்துக் கொள்வோம். அந்தக் கனவில் நாம் ஓர் ஆபத்தில் சிக்கிக் கொண்டதாகவும், அதிலிருந்து தப்ப முடியாமல் சிரமப்படுவதாகவும் கனவு காண்கின்றோம். அந்நிலையில் நாம் தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்கிறோம்.

அப்படி நாம் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டாலும் நாம் பார்த்த கனவில் இருந்து விடுபட்டாலும் கூட

நமது இதயம் கொஞ்ச நேரம் படபடப்புடனேயே இருக்கும். கனவினால் ஏற்பட்ட இதயப் படபடப்பு நீங்குவதற்கு சிறிது கால அவகாசம் தேவைப்படும்.

ஆனால் அந்த படபடப்பை நீக்குவதற்காக, நாம் கனவில் நுழைந்து அந்தக் கனவை மாற்றி அமைக்கத் தேவையில்லை.

இப்படி நமது நினைவுகள் யாவும் முடிந்து போன கனவுகளே. முடிந்து போன நினைவுகள் விட்டுச்செல்லும் உணர்வுகளும் தாமாக முடிவடைந்து விடுகின்றன. அது சம்பந்தமாக நாம் எதுவும் செய்யத் தேவையில்லை.

நமக்கு ஏற்படும் உணர்வுகள் யாவும் உடல் உணர்வுகளே.

நமது உடலில் ஏற்படும் இரசாயன மாற்றங்களின் மூலமாகவும் நரம்பு மண்டலங்களில் ஏற்படும் அதிர்வுகளின் மூலமாகவும் நமது உணர்வுகள் யாவும் நாம் உணரும் வகையில் வெளிப்படுகின்றன.

நாம் எத்தனையோ விதமான உணர்வுகளை அனுபவிக்கலாம் அத்தனையும் நமது உடலில் உள்ள நரம்பு மண்டலங்களில் ஏற்படும் இரசாயன மாற்றங்களே. அவை அனைத்தும் நமது உடலின் மூலமாக ஏற்படும் வெளிப்பாடுகளே.

ஒரு சராசரி மனிதனுக்கு ஏற்படும் சாதாரண அனுபவம் ஆயினும் சரி, ஒரு யோகிக்கு ஏற்படும் உயர் வகையான ஆன்மிக அனுபவம் ஆயினும் சரி, அவை யாவும் நமது உடலின் உதவியுடன் அனுபவமாகும் அனுபவங்களே.

மனதில் ஏற்பட்ட நினைவுகள் மறைந்திடுவது, நீரில் எழுதப்பட்ட எழுத்தைப் போல் எழுத எழுத மறைந்துவிடும். ஆனால் நமது உடல் மூலம் வெளிப்பட்ட அனுபவங்கள் மறைந்திட மேலும் சில வினாடிகள் தேவைப்படும்.

கனவு முடிந்த நிலையிலும், நமது உடலில் ஏற்பட்ட படபடப்பு மறைவதற்கு மேலும் சில வினாடிகள் தேவைப்படுகின்றன.

ஆனாலும், நினைவுகள் மாற மாற உடலில் ஏற்படும் உணர்வுகளும் மாறிப் போய்விடும்; மறைந்து போய்விடும்.

இப்படி

நமது நினைவுகளும் அவை போக்கில் தாமாக வந்து விட்டு தாமாக மறைந்து விடுகின்றன. அது சம்பந்தமாக நாம் செய்வதற்கு எதுவுமே கிடையாது.

ஆனால் நாம் நம்மை அறியாமல் நமது உணர்வுகளுடன் போராடி அதனைச் சீரமைக்கும் முயற்சியை மேற்கொண்டு விடுகிறோம்.

ஆன்மிகப் பயிற்சி முயற்சிகளை செய்திடும் போது, நமது உணர்வுகளும் ஓரளவுக்குக் கட்டுப்பட்டது போல் நடந்து கொள்கின்றன.

சில தியானங்களை மேற்கொள்ளும் போதும், ஆன்மீகமான சூழ்நிலைகளில் பங்கேற்கும் போதும், நமக்கு மோசமான உணர்வுகளோ சிந்தனைகளோ ஏற்படுவதில்லை. அதனால் நமது உணர்வுகளும் நினைவுகளும் நமக்குக் கட்டுப்பட்டவை என்ற தவறான முடிவுக்கு நாம் வந்து விடுகிறோம்.

அதனால் நமது உணர்வுகளை எப்போதும் நமது கட்டுப்பாட்டுக்குள் வைத்திட முயற்சி செய்து விடுகிறோம்.

இதனால் நமது மொத்த வாழ்வுமே போராட்டமாகப் போய்விடுகிறது.

நமது உணர்வுகளைச் சீரமைக்க வேண்டிய கட்டாயம் எதுவுமே நமக்குக் கிடையாது ஆயினும் நாம் அதனைச் சீரமைக்க முயன்று வருகிறோம்.

நம்முடைய நினைவுகளும் உணர்வுகளும் நம்முடைய இயல்பின் காரணமாகவே வெளிப்படுகின்றன.

நம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான மன இயல்பு உள்ளது.

நமது இயல்புக்கு ஏற்ற உணர்வுகள்தாம் நம்முடைய சூழ்நிலைக்கேற்ப வெளிப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

நம்முடைய ஒவ்வொரு நினைவுக்கும் ஒவ்வொரு உணர்வுக்கும் நமது சூழ்நிலை எப்படிக் காரணமோ அப்படி நமது இயல்புகளும் காரணமாக அமைந்துள்ளன.

நம்முடைய உணர்வுகளும் நினைவுகளும் வெறும் வெளிப்பாடுகளே. அவற்றின் அடித்தளமாக இருப்பது நமது இயல்புகளே.

இடி ஓசைக்குக் காரணம் மின்னல்களே. மின்னல்கள் தான் காரணம். ஓசை என்பது வெறும் விளைவே.

தவறான மின் இணைப்பு காரணமாக மின் உபகரணங்களில் தீப்பொறி வந்து கொண்டிருக்கிறதென்றால் தீயை அணைக்க தண்ணீரை ஊற்றுவது பயன்தராது.

காரணமான மின் இணைப்பை சரி செய்தால் போதும். விளைவைச் சரி செய்ய வேண்டிய அவசியம் கிடையாது.

நமது உணர்வுகள் அனைத்திற்கும் காரணமாக இருக்கும் நமது இயல்பை சரிசெய்ய நாம் முயன்றால் மட்டுமே அதில் பொருள் இருக்கிறது.

சரி நமது இயல்பு தான் அனைத்திற்கும் காரணம் என்றால், அதனைக் கண்டுபிடித்து அதனை நாம் சீரமைக்க வேண்டாமா?

ஆனால் நமக்கு என்னென்ன இயல்பு உள்ளது என்பதே நமக்குத் தெரியாது. நமது அடிமனதினுள் அது மறைந்து கிடக்கிறது. நமது அனுபவங்களும் செயல்களும் பதிவுகளாகி அந்த இயல்புகளாகத்தான் மாறி அமைந்து

கொண்டிருக்கின்றன. நம் பெற்றோரிடமிருந்து பாரம்பரியமாக கொண்டு வந்தது முதல் நம்முடைய அன்றாட அனுபவங்கள் வரை அத்தனையும் சேமிக்கப்பட்ட ஒரு சேமிப்புக் கிடங்காகவே நமது இயல்பு என்பது அமைந்துள்ளது.

அதனை நம்மால் நேரடியாக அணுக முடியாது. ஆகவே அந்த முயற்சியை நாம் கைவிடுவதைத் தவிர வேறு வழி இல்லை.

ஓர் இசைக்கருவியை எடுத்துக்கொண்டால் அதில் பலவிதமான இசைகளை எழுப்பும் பட்டன்கள் இருக்கும். அதில் ஏதாவது ஒரு பட்டனை மட்டும் அழுத்தினால் அதிலிருந்து சகிக்கமுடியாத ஓசைதான் வரும் இந்த ஓசைக்கும் இசைக்கும் சம்பந்தமில்லை என்று கருதி அந்த பட்டனை அப்புறப்படுத்திவிட்டு அடுத்த பட்டனை அழுத்துகிறோம். அதிலிருந்து வரும் ஓசை மேலும் மோசமானதாக இருக்கிறது.

இப்படிப் பார்த்து, நாம் ஒவ்வொரு பட்டனாக அப்புறப்படுத்துவோமாயின் பிறகு அங்கே இசைக்கருவியே இருக்காது.

அதே போல் நம்முடைய இயல்பில் எதையும் குற்றம் சொல்லி விட முடியாது. நம்முடைய இயல்பில் எது தேவையானது? எது தேவையில்லாதது? – என்று நம்மால் கூற முடியாது.

அன்புதான் சிறந்த பண்பு என்று நாம் கூறிக் கொள்ளலாம். ஆனால் சில சந்தர்ப்பங்களில் கோபம் கூட தேவைப்படலாம்.

மனவருத்தம் என்பது தேவையில்லாத உணர்வாக தோன்றலாம். நமது தொழிலில் நஷ்டம் ஏற்படும் போது மனவருத்தம் ஏற்படுவது தான் சரியானது. அப்படி மனவருத்தம் ஏற்பட்டால் தான் தொழிலை நஷ்டத்திலிருந்து மீட்டு வெற்றிகரமாக நடத்த முயற்சி செய்வோம்.

பயம் என்னும் உணர்வு நமக்கு உதவி செய்யாவிட்டால் நாம் பாம்பைக் கூட மிதித்துச் செல்ல வேண்டியது ஏற்பட்டுவிடும்.

நமது இயல்பில் இருக்கும் எல்லா விதமான உணர்வுகளும் நமது சூழ்நிலையை நிர்வாகம் செய்யும் வகையில் தேவைப்படத்தான் செய்கின்றன.

ஆகவே நம்முடைய இயல்பை சரி செய்ய வேண்டிய கட்டாயம் நமக்கு இல்லை.

வெளிப்பட்டு வரும் விளைவுகளான, நினைவுகளையும் உணர்வுகளையும் அப்புறப்படுத்தப் போராட வேண்டிய அவசியமும் இல்லை.

இந்நிலையில்,

நாம் செய்வதற்கு என்னதான் உள்ளது?

அகத்தளவில், நமது இயல்புகளைப் பொறுத்தும் நாம் எதனையும் செய்ய முடியாது.

நமது இயல்பில் இருந்து வெளிப்படும் உணர்வுகள் மற்றும் நினைவுகள் சம்பந்தமாக நாம் எதையும் செய்யத் தேவையில்லை.

அப்படி நாம் எதனையும் செய்யத் தேவையில்லை என்பதை கண்டுபிடிப்பதோடு நமது பணி முடிவடைந்து விடுகிறது.

நமக்கு ஏற்படும் அனுபவங்கள் எதனையும் மாற்றவோ அல்லது தக்கவைக்கவோ நாம் முயலாத போது அங்கு பிரிவு இல்லாத மனோ இயக்கம் மட்டுமே இருக்கிறது.

அந்நிலையில் எல்லா அனுபவங்களும் தாமாக வருகின்றன, தாமாக இருக்கின்றன, தாமாகப் போய் விடுகின்றன.

அந்நிலையில் நமது மனம் இரண்டு துண்டாக மாறுவதில்லை மனதே மனதைச் சீரமைக்கும் போராட்டத்தில் இயங்குவதில்லை.

இதனால் நமது மனது, கட்டுப்படுத்துபவர் என்ற ஒரு நபர் இல்லாத தன்மையில் அது போக்கில் இயங்குகிறது.

நம்முடைய கனவு நிலைக்கும் நனவு நிலைக்கும் உள்ள பெரிய வித்தியாசம் என்னவென்றால்,

நம்முடைய கனவு அது போக்கில் இயங்குகிறது.

நமது கனவை நாம் நமது விருப்பத்திற்கு ஏற்றவாறு மாற்றிக்கொள்ள முடியாது. அது அது போக்கில்தான் நடக்கும்.

இங்கு கட்டுப்படுத்துபவர் என்ற ஒரு நபர் இல்லாத தன்மையில் சுதந்திரமாக இயங்குகிறது.

ஆனால் நாம் நமது நனவு நிலையில், நம்முடைய விருப்பத்தையும், முயற்சியையும் புகுத்தி விடுகிறோம். நாம் காணும் கனவைப் பற்றி இன்னும் சற்று சிந்தித்துப் பாருங்கள் அங்கே சிந்தனைக்கும் செயலுக்கும் இடையில் இடைவெளி கிடையாது.

ஒரு செயலை எப்படிச் செய்ய வேண்டும் என முடிவெடுத்து செய்வது கிடையாது.

ஆனால்

நனவு நிலையில் நாம் ஏதாவது செயல்களில் ஈடுபடும் போது அந்த செயல் நடந்து கொண்டிருக்கும்போதே அந்தச் செயலோடு தொடர்பில்லாத வேறு எதைப் பற்றியாவதுகூட சிந்தித்துக் கொண்டிருப்போம்.

அத்தகைய நிலை நமது கனவில் கிடையாது. அங்கு சிந்தனை ஒன்று செயல் மற்றொன்று என்ற நிலையே கிடையாது. ஏனெனில் கனவின் மொத்த அம்சமே நமது நினைவு மட்டும்தான். நமது நினைவுதான் அங்கே செயல் போல் தோன்றுகிறது; சம்பவம் போலத் தோன்றுகிறது.

அதனால் கனவில் ஏற்படும் இயக்கம் ஒரே இயக்கமாக நம்முடைய குறுக்கீடு எதுவுமின்றி அதன் போக்கில் நடைபெறுகிறது.

அதுபோல்

நனவில் நமக்கு ஏற்படும் நினைவுகளும், உணர்வுகளும் கூட கனவு ஏற்படுவதைப் போன்று அது போக்கில்தான் ஏற்படுகின்றன.

கனவுக்கும் நனவுக்கும் வேறு என்ன வித்தியாசம் உள்ளது?

நாம் படுத்து தூங்கும் போது, நாம் படுத்திருக்கும் கட்டிலைப் பற்றி, நமக்குத் தெரியாது. நமக்கு மேல் பகுதியில் சுழன்று கொண்டிருக்கும் மின்விசிறியை நாம் அறிய மாட்டோம்; நமது கனவில் என்னென்ன சம்பவங்கள் என்னென்ன காட்சிகள் ஏற்படுகின்றனவோ அவற்றை மட்டுமே நம்மால் அறிய முடியும். நமது கவனம் முழுவதும் நமது கனவு காட்சியில் மட்டுமே பொருந்தியுள்ளது. நமது புலன்களின் காட்சியில் பொருந்துவதில்லை புலன்களும் செயல்படாமல் ஓய்வில் உள்ளன.

நமது கவனம், நமது கனவுக் காட்சியில் மட்டுமே பொருந்தி இருப்பதால் கனவுக் காட்சி மட்டுமே நமக்கு பிரதானமாக உள்ளது.

நமது மனது எதைக் காட்டுகிறதோ அதை மட்டுமே நாம் அறிகிறோம். நமது மனது எப்படிக் காட்டுகிறதோ, அப்படி மட்டுமே நாம் புரிந்து கொள்கிறோம்.

★

நமது கனவு நிலையில் நம்மைச் சுற்றி என்ன நிகழ்ந்தாலும் நமக்குத் தெரியாது நமது நினைவில் தோன்றுவது மட்டுமே நமது கனவுச் சம்பவங்களாக அறியப்படுகின்றன.

நமது கனவில் இப்படி நடக்கிறது. நமது நனவு நிலையில் எப்படி நடக்கிறது?

நம்முடைய நனவு நிலையில், நாம் நம்மை அறிகிறோம்; நமது சிந்தனையை அறிகிறோம்; நம்மைச் சுற்றியுள்ள அனைத்தையும் அறிகிறோம். பலவற்றையும் அறியும் சுதந்திரம் நமக்கு உள்ளது. அப்படி பலவற்றையும் அறியும் சுதந்திரம் நமக்கு இருந்தாலும் நாம் ஒரே நேரத்தில் எல்லாவற்றையும் அறிகிறோமா?

அப்படி அறிவதில்லை. ஒரே நேரத்தில் ஒன்றை மட்டுமே நம்மால் அறிய முடியும். ஒரே நேரத்தில் பலவற்றையும் அறியும் சாத்தியம் எவருக்கும் கிடையாது.

மொத்தத்தில் மனதின் மூலம் எதனை அறிகிறோமோ அதைத்தான், கனவிலும் அறிகிறோம்; நனவிலும் அறிகிறோம்.

கனவு நிகழும்போது நாம் நினைவுகளிலும் உணர்வுகளிலும் குறுக்கீடு செய்வதில்லை. ஆனால் நனவு நிலையில் நமது நினைவுகளிலும் உணர்வுகளிலும் குறுக்கீடு செய்து விடுகின்றோம். அப்படி குறுக்கிட்டு நமது நனவு நிலையில் உள்ள நினைவுகளையும் உணர்வுகளையும் சீரமைத்து விடலாம் என தவறுதலாக ஒரு முடிவு எடுத்து விடுகின்றோம்.

அப்படி நம்மால் அதனைச் சீரமைக்க முடியாது. அது அதன் போக்கி இயங்கி அதன் போக்கில் தான் மறைகிறது. அது சம்பந்தமாக நாம் செய்வதற்கு எதுவும் இல்லை என்பதைப் புரிந்து கொள்வதுதான் உண்மையான புரிதல்.

இந்த உண்மையைப் புரிந்து கொள்ளும் பொழுது நமது நனவு நிலை அனுபவமும் கனவுநிலை அனுபவமாக மாறி விடுகிறது.

நமது நனவு நிலை அனுபவத்தை கனவு நிலை அனுபவப்பாக மாற்ற வேண்டும் என்று முயற்சி செய்து இப்படி அதனை நாம் மாற்றவில்லை.

நாம் நம்முடைய உணர்வுகளைச் சீரமைக்கும் பொறுப்பைக் கைவிடும் போது நம்முடைய மனதின் இயக்கம் இந்த போராட்டமற்ற தளத்துக்கு வந்து விடுகிறது. தானாக இயங்கும் இந்த தளத்துக்கு வந்து விடுகிறது. கனவு போன்று இயங்கும் இந்த தளத்துக்கு வந்து விடுகிறது.

இந்த உண்மையைப் புரிந்து கொண்டவர்களை தான் ஞானி என்று குறிப்பிடுகிறோம்.

ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் ஏற்படும் உணர்வுகளிலும் அனுபவங்களிலும் எந்த வேறுபாடும் இல்லை. எல்லாமே தோன்றி மறையும் தங்கச்சூட்டை போன்றதுதான்.

அஞ்ஞானி தனக்கு வரும் உணர்வுடன் போராடி அதனைப் புதுப்பித்து கொள்கிறான். அதனால் அந்த உணர்வுகள் அவனிடம் நீண்ட நேரம் தங்கி விடுகின்றன. ஆனால் ஞானி அதனை புதுப்பித்துக் கொள்வது இல்லை அதனால் அவருக்கு வரும் எந்த உணர்வுகளும் அவர்களிடம் தங்கி இருப்பதில்லை.

ஞானி தனது அகத்தை நிர்வாகம் செய்வதில்லை. தன் செயலை மட்டுமே நிர்வாகம் செய்கிறார். அஞ்ஞானி தன் அகம் புறம் இரண்டையுமே நிர்வகிக்கிறான்.

தன்னோடு முரண்படாதவன் ஞானி; தன்னோடு முரண்படுபவன் அஞ்ஞானி.

நமது அனுபவங்களின் முதலாவது கணத்தில், இயற்கையாகவே நாம் நமது அனுபவங்களோடு முரண்படுவதில்லை.

முதலாவது கணம் முடிந்தநிலையில்தான் அஞ்ஞானி கூட தனது அனுபவங்களோடு முரண்படுகிறான்.

ஞானியாக இருப்பது இயற்கையானது; அஞ்ஞானியாக இருப்பதுதான் செயற்கையானது.

நாம் அனைவரும் இயற்கையாகவே ஞானியாக இருந்து உணர்வுப் பிரவாகத்தில் குறுக்கிடாமல் விடுதலையோடு வாழ்வோமாக.

## சென்னை ஸ்ரீபகவத் பவன்

அய்யா மீது தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

சென்னையில் ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்காக நாம் ஏற்கெனவே முயற்சி எடுத்திருந்தோம். அது சில தவிர்க்க முடியாத காரணங்களால் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி மீண்டும் அதற்கான ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

சென்னையில் அமைய விருக்கின்ற ஸ்ரீபகவத் பவன் நமது அய்யாவின் இல்லமாகவும் நாம் அனைவரும் ஐயாவை சந்தித்து தங்கி உரையாடிச் செல்ல ஏற்றவகையில் நமக்கான பகவத் பவன் இல்லமாகவும் அமையவிருக்கிறது.

இதனை நாம் கட்டுவதற்குப் பதிலாக புதியதாக கட்டி முடிக்கப்பட்ட இல்லமாக வாங்க முடிவெடுத்து இருக்கிறோம்.

இதனை வாங்குவதற்கு நமக்குத் தேவைப்படும் தொகையை நிறுவனர் (Founder) நன்கொடையின் மூலம் பெறலாம் என முடிவெடுத்துள்ளோம்.

முன்பே சென்னை ஸ்ரீபகவத் பவன் கட்டிடத்திற்கான நிதி வழங்கியவர்களின் நிதியும் இந்த வகைக்கு பயன்படுத்தப்படும்.

ஏற்கெனவே நிதி வழங்கிய இவர்களுக்கு நாம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது சென்னை ஸ்ரீபகவத் பவன் இல்லத்தில் பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் பங்களிப்பும் இருக்க வேண்டும் என்பதே முக்கியம்.

பங்களிப்புத் தொகை எவ்வளவு என்பது முக்கியமல்ல.

பங்களிக்கும் உள்ளமே முக்கியம்.

எனவே தங்களால் இயன்றதை வழங்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். உள்ளன்போடு தாங்கள் அளிக்கும் பங்களிப்பை மனமுவந்து பெற்றுக் கொள்கிறோம்.

வாருங்கள் ஒன்றிணைவோம். நம் அனைவரின் ஒருங்கிணைந்த கூட்டு முயற்சியால் நமக்கான இல்லத்தை உருவாக்குவோம்.

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## சிக்கலான சூழ்நிலையை எதிர்கொள்வது எப்படி?

**கேள்வி :** நான் பகவத் ஐயாவின் எல்லா நூல்களையும் படித்து இருக்கின்றேன். தினமும் 6 மணி நேரம் யூடியூபில் ஐயாவின் வீடியோவை பார்த்து வருகின்றேன். ஞானத்தைப் பற்றிய ஐயாவின் கருத்துகள் மிகவும் எளிமையாக புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் நடைமுறை வாழ்வில் நான் சந்திக்கும் சிக்கலான சூழ்நிலைகளில் என்னை பாதிக்கும் எண்ணங்களை பிரவாகத்தில் விட முடியவில்லை. அந்த சூழ்நிலையை எதிர்கொள்ள முடியாமல், அந்த இடத்தை விட்டு நகர்ந்து வெளியே சென்று விடுகிறேன். பிறகு மீண்டும் பகவத் ஐயாவின் வீடியோவை பார்த்து மன ஆறுதல் அடைகின்றேன். இப்படி தொடர்ந்து வீடியோ பார்ப்பதும் கூட எனக்கு மிகவும் சோர்வை ஏற்படுத்துகிறது. எனக்கு ஏற்படும் சிக்கலான சூழ்நிலையை எதிர்கொள்வதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?

**பதில் :**

**சரவணன் :** ஸ்ரீபகவத் ஐயாவின் புத்தகங்களை படிப்பது, யூடியூப்பில் ஐயாவின் உரையைக் கேட்பதன் மூலம் மனதின் செயல்பாட்டினை பல்வேறு கோணங்களில் நன்றாக விளங்கிக்கொள்ள முடியும். மனதின் செயல்பாட்டினை அகம் புறம் என இரண்டாகப் பிரித்து புரிந்து கொள்வதன் மூலம் நம்மால் எளிமையாக புரிந்து கொள்ள முடியும். இப்படி பிரிப்பதால் மனதின் செயல் பாட்டில் நமக்கு எந்த பகுதியில் வேலை இருக்கிறது, எந்த பகுதியில் வேலை இல்லை என்பதை தெளிவாக புரிந்துகொள்ள முடியும். அகத்தில் நமக்கு எந்த ஒரு வேலையும் இல்லை என்ற தெளிவும் புறத்தில் செயலின் மூலம் மட்டுமே நமக்குத் தேவையானவற்றை பெற்றுக் கொள்ள முடியும் என்ற தெளிவும் நமக்கு கிடைக்கிறது. எப்படிபட்ட சிக்கலான பிரச்சனையையும் கூட அகம்– புறம் என்று பிரித்துக் கொள்வதின் மூலம் நம்முடைய பிரச்சனைகளுக்கும் தீர்வு கிடைத்துவிடுகிறது.

சிக்கலான சூழ்நிலையை நீங்கள் எவ்வாறு எதிர்கொள்கிறீர்கள்? அப்படி எதிர்கொள்ளும்போது உங்களுக்குள் என்ன நிகழ்கிறது?

**நண்பர்:** ஒரு சிக்கலான சூழ்நிலையை எதிர்கொள்ளும்போது எனக்கு பயம், பதட்டம், படபடப்பு, உடல் வெப்பமடைதல், வேர்த்தல், என ஒன்றன் பின் ஒன்றாக தொடர் நிகழ்வாக நிகழ்கிறது. அந்த சூழ்நிலையில் என்னையும் மீறி நான் ஏதாவது தவறாக நடந்து கொண்டு விடுவேனோ என்ற பயமும் ,பதட்டமும் ஏற்படுகிறது. இந்த பய உணர்வையும் எதிர்கொள்ள முடியாமல் அந்த இடத்தை விட்டு நகர்ந்து சென்று விடுகின்றேன். பிறகு பகவத் அய்யாவின் வீடியோவை பார்த்து மனதை அமைதிப்படுத்திக் கொள்கிறேன். இப்படித்தான் நான் சிக்கலான சூழ்நிலையை எதிர்கொள்கிறேன்.

**சரவணன்:** நீங்கள் எதிர்கொண்ட சிக்கலான சூழ்நிலையில் எது அகம் , எது புறம் என்று உங்களால் பிரித்துக் கூற முடியுமா?

**நண்பர் :** தாராளமாக..மனதில் ஏற்படும் பயம், பதட்டம், படபடப்பு, உடல் வெப்பம் அடைதல், வேர்த்தல், ஏதாவது தவறாக நடந்து கொள்வோமோ என்ற பயம் என அனைத்தும் அக உணர்வுகள் ஆகும். நான் அந்த இடத்தை விட்டு வெளியே சென்று பகவத் ஐயாவின் வீடியோவை பார்த்து மன அமைதியை ஏற்படுத்திக் கொள்வது புறம் ஆகும். சரிதானே?

**சரவணன் :** மிகவும் சரி. நீங்கள் மிகத் தெளிவாக தெரிந்து வைத்திருக்கிறீர்கள். அகத்தில் ஏற்படும் எந்த உணர்வுக்கும் நாம் எதுவும் செய்யத் தேவையில்லை என்பதுதானே புரிதல். அகத்தில் நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதைத்தானே நீங்கள் படித்த புத்தகமும் பகவத் ஐயாவின் வீடியோவும் பல்வேறு கோணங்களில் விளக்கமாக எடுத்துக் கூறியிருக்கிறது. ஆனால் நீங்கள் தொடர்ந்து போராடிக் கொண்டிருப்பது உங்கள் அகத்தில் தானே?

**நண்பர் :** ஆமாம் .என்னால் அக உணர்வுகளை எதிர்கொள்ள முடியவில்லை. அதனால் அந்த இடத்தை விட்டு தப்பி வெளியே சென்று என்னை மறைத்து கொள்கின்றேன்.

**சரவணன் :** சிக்கலான சூழ்நிலையில் அந்த இடத்தைவிட்டு தப்பி ஓடுவதும் கூட அகத்தை எதிர்கொள்ள முடியாமையினால் ஏற்படுவதே. அந்த இடத்தை விட்டு வெளியே சென்று யூட்யூபில் ஐயாவின் வீடியோவை பார்ப்பதும் கூட'எந்த வகையிலும் உங்களுக்கு பாதிப்பு வந்து விடக்கூடாது என்பதற்கான இன்ப நாட்டமே' .இது முழுவதும் தப்பி ஓடும் மனநிலையே ஆகும். இது அகத்தை தீரத்துடன் எதிர்கொள்வது ஆகாது.

**நண்பர் :** அகத்தை தீரத்துடன் எதிர்கொள்ளுதல் என்றால் என்ன?

**சரவணன் :** அகத்தில் தாங்கமுடியாத மன வேதனைகளை தரும் எண்ண உணர்வுகள் ஏற்பட்டாலும் ஏற்பட்டு விட்டு போகட்டும். அந்த உணர்வு நம் அகத்திலே தங்கி இருந்தாலும் கூட, இருந்து விட்டு போகட்டும் என்று விட்டு விட வேண்டியதுதான். அந்த உணர்வை நிர்வாகம் செய்யும் எந்த பொறுப்பும் நமக்கு கிடையாது என்ற அக சரணாகதியை அடைந்துவிட வேண்டும். மனதில் ஏற்படும் உணர்வுகள் அனைத்தும் புறத்தை நாம் எதிர்கொண்டு செயல்படுவதற்காகதானே. புறத்தில்

செயல்படுவதற்காகதான் மனம் என்ற கருவியே நமக்குக் படைக்கப்பட்டிருக்கிறது. மனம், தான் சந்திக்கும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப ஏதாவது தகவல்களை நமக்கு கொடுத்துக் கொண்டே தான் இருக்கும். நமது புற செயலுக்கு தேவை எனில் அதை எடுத்து பயன்படுத்திக் கொள்ளலாம். செயல் தேவை இல்லை எனில் மனதை அதன்போக்கில் சுதந்திரமாக விட்டு விடலாம். மன உணர்வு சம்பந்தமாக நாம் செய்வதற்கு எந்த வேலையும் இல்லை என்பதை நம்முள் தெளிவாக விளங்கிக் கொள்வதே மனதை தீரத்துடன் எதிர்கொள்வது ஆகும்.

**நண்பர் :** அப்படியெனில் இந்த நிகழ்வில் என்னுடைய தவறான அணுகுமுறை என்ன? நான் எந்த இடத்தில் தவறாக புரிந்து கொண்டிருக்கின்றேன்?

**சரவணன் :** நீங்கள் அகப் போராட்டத்தில் இருந்தே இன்னும் விடுபடவில்லை. அகத்தில் நம்மால் எதுவும் செய்ய முடியாது என்பதை நீங்கள் இன்னும் தெளிவாக புரிந்து கொள்ளவேண்டும். இப்படி நாம் புரிந்து கொள்வதும் கூட நம்மை பாதித்த எண்ண உணர்வின் தாக்கத்திலிருந்து விடுபடுவதற்காக அல்ல என்பதை நாம் விளங்கிக் கொள்ள வேண்டும்.

நமக்கு எந்த மாதிரியான பயம் ஏற்பட்டாலும் உடல் வெப்பம் அடைந்தாலும் வேர்த்தாலும் படபடப்பு அடைந்தாலும் பதட்டம் ஏற்பட்டாலும் எது நிகழ்ந்தாலும் நிகழட்டும். அகத்திலே எந்த உணர்வு இருந்தாலும் இருந்துவிட்டு போகட்டும் என்றும் அக உணர்வை நம்மால் எதுவுமே செய்யமுடியாது என்றும் முடித்துக் கொள்ள வேண்டும். அக உணர்வின் மீதான நமது பங்களிப்பில் இருந்து முழுமையாக நம்மை விடுவித்துக்கொள்ள வேண்டும். இதுவே முதன்மையானது. புறத்தில் செயல்படுவது என்பதைகூட இரண்டாம் பட்சமாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

**நண்பர் :** அக உணர்வை எதிர்கொள்ள முடியாமல்தான் தப்பி ஓடும் மனநிலைக்கு வருகிறேன் என்பது புரிகிறது. வேறு எப்படித்தான் இந்த புரிதலை எனக்குள் நான் விளங்கிக் கொள்வது?

**சரவணன் :** உதாரணமாக ஒரு அபாயகரமான காட்டாறு ஓடிக்கொண்டிருக்கிறது. அந்த ஆற்றின் நடுவே வளைந்து நிற்கும் ஓர் மரக்கிளையை நாம் உயிர் பிழைப்பதற்காக இறுகப் பற்றிப் பிடித்து தொங்கிக் கொண்டு இருப்பதாக வைத்துக்கொள்வோம். ஆற்றில் ஓடும் தண்ணீரின் பிரவாக ஓட்டத்தை நம் கால்களை விட்டு துழாவுவதன் மூலம் நம்மால் முழுமையாக உணர முடியுமா? நிச்சயமாக உணர முடியாது. ஆற்றில் கால்களை விட்டு துழாவுவதின் மூலம் தண்ணீரின் வேகத்தை நம்மால் ஓரளவிற்கு தான் உணர முடியுமே தவிர முழுமையாக உணரவே முடியாது. நம்மால் தொடர்ந்து மரக்கிளையைப் பற்றியும் பிடிக்க முடியவில்லை. ஒருகட்டத்தில் உயிர் பிழைப்பதற்கான நமது எல்லா முயற்சிகளும் தோல்வி அடைகிறது. இனி நாம் உயிர் பிழைப்பதற்கு வேறு எந்த வழியும் இல்லாத நிலையில் நமது கைகளின் பிடி தளர்ந்துபோய் கையறு நிலையில் நிர்கதியாக அப்படியே ஓடும் ஆற்றில் விழுந்து விடுகின்றோம். ஆற்றில் விழுவதற்கு நாம் இங்கு எந்த முயற்சியும் எடுக்கவில்லை. நம்முடைய எல்லா முயற்சிகளும் தோற்றுப்போன நிலையில்தான் அப்படியே ஆற்றில் விழுந்து விடுகின்றோம். இப்பொழுதுதான் ஆற்றில் ஓடும் தண்ணீரின் உண்மையான பிரவாக வேகத்தை நம்மால் முழுமையாக உணர முடியும்.



ஆற்றில் விழுந்து விடக்கூடாது என்ற மரண பயத்தில் மரக்கிளையைப் பற்றிப் பிடித்திருப்பதை போல் நாம் நமக்கு எந்தவிதமான வேதனை தரும் உணர்வும் ஏற்பட்டுவிடக்கூடாது என்றும் எதிர்காலத்தில் பாதுகாப்புடன் இருக்க வேண்டும் என்ற உணர்வோடும் மனதைப் பற்றிப் பிடித்துக்கொண்டிருக்கிறோம்.

மரக் கிளையை இறுக்கி கட்டிப்பிடித்துக்கொண்டு கால்களை காட்டாற்றில் விட்டு துழாவி தண்ணீரின் வேகத்தை ஏதோ ஓர் அளவிற்கு உணர்வதைப் போல் நம்மை பாதித்த எண்ண உணர்வுகளை "நான் பிரவாகத்தில் விட்டுவிடுகிறேன்" என்று கூறிக்கொள்கிறோம்.

எந்த கணத்தில் நம்முடைய முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்று, நம்மால் தொடர்ந்து மரக்கிளையை பற்றிப் பிடிக்க முடியாமல் இனி வேறு எந்த வழியும் இல்லை என்ற கையறு நிலையில் பிடி தளர்ந்துபோய் நிர்க்கதியாக அப்படியே ஓடும் ஆற்றில் விழுகிறோமோ, அப்போதுதான் ஆற்றின் பிரவாகத்தில் நம்மால் பயணிக்க முடியும். இதை போல் மனோரீதியான நம்முடைய அத்தனை முயற்சிகளும் தோல்வியடைந்து நிர்க்கதியான கையறு நிலையில் மட்டுமே ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்வது போல் நம் மனம் பிரவாக நிலையை அடைகிறது; விடுதலையை பெறுகிறது.

நமது முழு முயற்சியும் தோற்றுப்போன நிலையில் தான் விடுதலையின் இயக்கமே நடைபெறுகிறது.

இப்படி மனதிடம் தோற்றுப் போவதை தான் மனதின் இயலாமை, அகத் தோல்வி, அகச் சரணாகதி என பல வார்த்தைகளில் கூறுகிறோம்.

**நண்பர் :** இப்போது நன்கு புரிந்து கொண்டேன் ஐயா, நான் அகத்தில் இதுவரை ஏதோ ஒரு பாதுகாப்பு உணர்வுடனே விடுதலை பெற முயற்சி செய்திருக்கிறேன் என்பது நன்கு புரிகிறது. முயற்சியே விடுதலைக்கு தடை என்பதை நன்கு புரிந்து கொண்டேன். ஆற்றில் முழுவதுமாக விழுவதை போல முயற்சியைக் கைவிட்ட நிலை தான் விடுதலை ஏற்படும் என்பதை நன்கு புரிந்து கொண்டேன் ஐயா. நன்றி

**நம் அக இயலாமையை புரிந்துகொள்ளும்வரை முயற்சி தேவை.**

**புரிந்தபின் அக முயற்சியே விடுதலைக்கு தடை.**

# ஸ்ரீ பகவத் அய்யா அவர்களின் அனைத்து வீடியோக்களையும் Youtubeல் காண...

ஸ்ரீ பகவத் அய்யா அவர்களின் சொற்பொழிவுகள் / கேள்வி பதில்கள் ஆகியவை ஆயிரத்திற்கும் மேலாக TouTube இல் வீடியோக்களாக உள்ளன. இதனை எப்பொழுதும் உங்கள் மொபைலிலோ அல்லது கம்ப்யூட்டரிலோ பார்த்துப் பயன் அடையலாம். ஸ்ரீ பகவத் அய்யாவின் ஞான முகாம்கள் முழுவதையும் வீட்டிலிருந்தே கண்டு பயனடையலாம். நீங்கள் பகிர்ந்தும் (Share) கொள்ளலாம். ஒவ்வொரு தினமும் ஒரு வீடியோவுக்கு குறையாமல் இதில் ஏற்றப்படுகின்றன.

அய்யாவின் வீடியோக்களை (காணொளிகள்) தேடிக் காண்பது எப்படி என்பதின் விளக்கம்.

1. Mobile (செல்பேசி) YouTube App பயன்படுத்தி முதலில் Youtube app ஐ திறந்து கொள்ளவும்.
2. "Sri Bagavath" என்று ஆங்கிலத்தில் தேடல் பெட்டியில் (search box) டைப் (தட்டச்சு) செய்யவும்.
3. டைப்பிங் செய்தபின் தேடுவதற்காக ஓகே தரவும்
4. இப்போது Bagavath Pathai Tamil என்ற பெயரில் உள்ள YouTube Channel நமது தேடலின் முடிவுகளில் கிடைக்கும். (Search Results)
5. இப்போது Bagavath Pathai Tamil என்பதின் மேல் தொட்டால் அது திறக்கும்.
6. திறந்தவுடன் அதில் Subscribe என்று இருப்பதை அழுத்தி (தொடுதல்) Subscribe செய்வதால் புதிய விடியோக்கள் பதிவேற்றப்படும் போது உடனுக்கு உடனே காணமுடியும். Channel ஐ ஒவ்வொரு முறையும் தேட வேண்டிய அவசியமில்லை.
7. அடுத்து subscription என்பதற்கு பக்கத்தில் உள்ள மணி (கோவில் மணி படம்) படத்தின் மீது (Bell Icon) அழுத்தவும். (இப்படி செய்வதால் புதிய வீடியோக்கள் பதிவேற்றம் ஆகும்போது புதிய வீடியோ பதிவேற்றம் ஆகியுள்ளது என்று செய்தி Notification YouTube App ஐ திறந்தவுடன் கீழே உள்ள மணி (Bell) படத்தில் காணலாம்.
8. இப்போது நாம் bagavath pathai Tamil channel லில் வேண்டிய வீடியோ மீது அழுத்தி கண்டு பயன் பெறலாம்.
9. Playlist என்பதன் மீது அழுத்தினால் தனித்தனியாக தொகுக்கப்பட்ட அய்யாவின் வீடியோக்கள் கிடைக்கும். தனித்தனியாக என்றால் உதாரணமாக 2019 ஏற்காடு ஞான முகாம் வீடியோக்கள் தொகுப்பை ஒரே இடத்தில் காணலாம்.

   உதாரணமாக அய்யாவிடம் அன்பர்கள் கேட்ட கேள்விகளின் தொகுப்பான "கேள்விகள் ஆயிரம்" என்பதை தனியாக காணலாம்.

   ஐயாவின் நேரடி சத்சங்க ஒளிபரப்பை காண live / schedule என்பதை அழுத்தவும்.
10. Videos என்பதில் தொடர்ந்து அய்யாவின் வீடியோ பதிவுகள் இருக்கும்.
11. இப்போது நமக்கு ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் அய்யாவின் வழிகாட்டல் வீடியோ வேண்டுமென்றால் அதை எப்படி தேடுவது உதாரணத்துடன் பார்ப்போம்.

   Youtube app ஐ திறக்கவும். தேடல் பெட்டியில் "Sri Bagavath பயம்" என்று டைப்பிங் செய்து தேடினால் பயம் தொடர்பான அய்யாவின் வழிகாட்டல் வீடியோ காட்சிகள் தேடுதலின் விளைவாக கிடைக்கும்.

   Sri Bagavath என்று ஆங்கிலத்திலும் கூடவே வேண்டியதை தமிழிலும் டைப்பிங் செய்து தேடலாம். உதாரணமாக Sri Bagavath கோபம், Sri Bagavath சித்தம், Sri Bagavath கவலை என்று தேடிப் பலன்பெறலாம்.

இதைபற்றி மேலும் விவரங்களை தெரிந்து கொள்ள திரு. **பாபுலால்**. பெங்களூர் +919449035454

## ஸ்ரீவில்லிப்புத்தூரில்

## ஸ்ரீ பகவத் மிஷன் நடத்தும்

# ஒரு நாள் ஞான முகாம்

வழங்குபவர்கள் :

**திரு. VAP சரவணன் & திரு.K.S. ஜீவமணி**

நாள் : **16.02.2020 ஞாயிற்றுக்கிழமை**

நேரம் : **காலை 10.00 – மாலை 6.00 மணிவரை**

இடம் : **பெரியசாமி மாளிகை,**
கீழ புதுத்தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர்

தீவிர ஆன்மிக தேடல் உள்ளவர்களுக்கும், கோபம், பயம், கவலை, எதிர்மறை உணர்வுகளிலிருந்து விடுபட விரும்புபவர்களுக்கும் மிகுந்த பயனுள்ள வகையில் இருக்கும்.

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக!

**அனுமதி இலவசம்.**

விவரங்களுக்கு

**HOTEL GOLDEN RAYAL**
**ஹோட்டல் கோல்டன் ராயல்**
3, வடக்கு ரதவீதி, ஸ்ரீவில்லிபுத்தூர்.
**8610845633, 9442440249, 9655561444**

ஹிந்து ஆன்மீக கண்காட்சி ஜனவரி 29 முதல் பிப்ரவரி 3 வரை சென்னையில் வேளச்சேரியில் உள்ள குருநானக் கல்லூரியில் நடந்தது. பல லட்ச ஆன்மீக நாட்டம் உள்ள மக்கள் வந்து சென்றனர். பகவத் மிஷனுக்கு ஏழாவது வருடமாக ஒரு ஸ்டால் அளிக்கப்பட்டது. நமது அன்பர்கள் **தியாகராஜன், ரவிச்சந்திரன், முத்துலட்சுமி, பெருமாள்சாமி, ஜான்சி, ஹேமலதா, விஜயன், ரமேஷ் ராஜகோபால், பெருமாள்சாமி, சுரேந்தர், நிருபமா, சந்திரசேகர், ஆனந்தன் அக்குஹீலர் முத்துக்குமார்** மற்றும் **தினேஷ் குமார், லட்சுமி நாராயணன், பத்மநாபன்** மற்றும் பலரும் அங்கு அமர்ந்து அய்யா கருத்துக்களை விளக்கியும் நமது மாத இதழ்களை இலவசமாக அளித்தும் கண்காட்சிக்கு வரும் மக்களுக்கு சேவை செய்தனர்.

இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்.
9994205880, 9789165555

# நிகழ்ச்சி நிழல்கள்





அன்பர்கள் ஜருகு மலை உச்சியில்



காலை நேர நடை பயிற்சியின் போது...

காலை நேர நடைபயிற்சிக்கு பிறகு ஓய்வு...

ஹிந்து ஆன்மிக சேவை கண்காட்சியில்













# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

வாழ்வில் நாம் அடைய வேண்டிய மிக உயர்ந்த நிலையே முக்திதான். முக்தி என்பது நம் பிறப்பியல்பாகவே அமைந்துள்ளது. அது நம் பிறப்போடு இணைக்கப்பட்டு இருந்தாலும் இடையில் வந்த அறிவின் குறுக்கீடே அதற்குத் தடையாக இருக்கிறது. அந்த அறிவே அகத்தில் தன் இயலாமையைப் புரிந்து கொள்ளும் போது இழந்த விடுதலை மீண்டும் உயிர் பெறுகிறது.

இப்படி அகத்தில் தன் இயலாமையை புரிந்துகொள்ளும் அறிவைதான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

இப்படி எந்தப் புரிதல் அகச் சரணாகதியைக் கொடுக்கிறதோ அந்த புரிதலைதான் ஞானப் புரிதல் என்று குறிப்பிடுகிறோம்.

நமது பகவத் பாதையில் பயணிக்கும் பலர் ஏதோ ஒரு வகையில் தன் அக இயலாமையைப் புரிந்து கொண்டதால் விடுதலையோடு வாழ்ந்துவருகிறார்கள்.

இவர்கள் அனைவருக்கும் ஏற்பட்ட விடுதலை ஒன்றுதான். ஆனால் இவர்கள் பெற்ற ஞானம் அப்படி அல்ல. அது வெவ்வேறு கோணங்களில் அவர்களின் புரிதலாக அமைந்திருக்கலாம்.

"மனதின் இயக்கம் என்பது இயற்கையானது. நமக்கு அங்கு எந்த வேலையும் இல்லை" என்பதை புரிந்து கொள்ள வேண்டும். இதுதான் நாம் புரிந்து கொள்ள வேண்டிய மிக முக்கியமான புரிதல்.

மனதின் இயக்கத்தை அகம்-புறம் என்று பிரித்து புரிந்துகொள்ளலாம், சிந்தனையையும் (thought) சிந்தித்தலையும் (thinking) பிரித்துப் பார்த்து புரிந்து கொள்ளலாம், மனோலயம் – மனோ நாசம் என்றால் என்ன என்று பிரித்துப் பார்த்து புரிந்து கொள்ளலாம் அல்லது நான் யார்? என்ற விளக்கம் பெற்று புரிந்து கொள்ளலாம். இப்படி ஏதோ ஒரு கோணத்தில் அகத்தில் அறிவின் இயலாமை புரிந்து கொள்ள வேண்டும். இதில் எந்த கோணத்தில் புரிந்து கொண்டாலும் புரிந்தது புரிந்துதான். இப்படித்தான் புரிந்து கொள்ள வேண்டும் என்ற கட்டாயம் எதுவுமில்லை. எல்லாக் கோணத்திலும் புரிந்துகொள்ள வேண்டும் என்ற அவசியமும் எதுவுமில்லை. இந்த கோணத்தில் புரிந்து கொண்டால் உயர்வு என்றோ இந்தக்கோணத்தில் புரிந்து கொண்டால் குறைவு என்றோ எதுவுமில்லை. எந்தக் கோணத்தில் புரிந்து கொண்டாலும் சரி, அந்தப் புரிதல் அகச் சரணாகதியை கொடுக்க வேண்டும். அதாவது அகத்தில் நம் முயற்சியை கைவிட வேண்டும். அதுதான் முக்கியம்.

அதனால்தான் நமது ஞான முகாம்களில் முடிந்தவரை எல்லா கோணங்களிலும் மனதின் இயக்கத்தை புரிய வைப்பதற்கான முயற்சியில் ஈடுபடுகின்றோம். இதனால் ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் உறுதியாக ஏதோ ஒரு வகையில் மனதின் இயலாமையை புரிந்துகொண்டு அக விடுதலையைப் பெற்றுவிடுகிறார்கள்.

அந்த வகையில் நமது ஸ்ரீபகவத் பவனில் ஜனவரி 24 ஆம் தேதி முதல் 26ம் தேதி வரை நடைபெற்ற ஞான முகாம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

இதனைத் தொடர்ந்து பிப்ரவரி 16ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை ஸ்ரீவில்லிபுத்தூரில் ஒருநாள் ஞான முகாம் நடைபெற உள்ளது. இதனை திரு. சரவணன் அவர்களும் நானும் வழங்க உள்ளோம்.

ஞான முகாம் நடைபெறும் இடம் மற்றும் விவரங்கள் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளன. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்துகொண்டு பயனடைய அழைக்கிறோம். இதனை ஆன்மிகத் தேடல் உள்ள அன்பர்களுக்கும் அறிமுகப்படுத்தி அவர்களையும் பயன் பெறச் செய்யுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

ஞானத்தை புரிந்துகொள்வோம்!

புரிதலை அனைவருடனும் பகிர்ந்து கொள்வோம்!!



# ஜென் கதை



## "சிங்கமும் நரியும் கற்றுக்கொடுத்த பாடம்"

இளைஞன் ஒருவனுக்கு வாழ்க்கையில் ஏற்பட்ட பல்வேறு பிரச்சனைகளால் அவன் கடும் துன்பத்தை அனுபவித்து வந்தான். துன்பங்களிலிருந்து விடுபட்டு வாழ ஓர் ஞானியைச் சந்தித்தான்.

தன்னுடைய துன்பங்களை எடுத்துக்கூறி ஏதாவது ஒரு உபாயம் கூறும்படி வேண்டி நின்றான்.

ஞானி ஆன்மீகத்தின் மிக உயர்ந்த நிலையான சரணாகதியே அனைத்துத் துன்பங்களிலிருந்தும் விடுதலையை வழங்கவல்லது என்றார். இளைஞனும் முழு நம்பிக்கையுடன் சரணாகதியில் வாழ்ந்து வர முயன்றான்.

தன் பிழைப்பை நடத்துவதற்காக காடுகளுக்குச் சென்று விறகு வெட்டி அதை சந்தையில் விற்று கிடைக்கும் பணத்தை கொண்டு குடும்பத்தை நடத்தி வந்தான்.

ஒருநாள் காட்டில் விறகு வெட்டிக் கொண்டிருக்கும் பொழுது இரண்டு கால்களை இழந்த நரி ஒன்று மிகவும் பசியுடன் தத்தித்தத்தி இரைத் தேடி வந்து கொண்டிருந்தது. நரியை கண்ட இளைஞன் மரத்திற்கு பின்னால் ஓடி ஒளிந்து கொண்டான். அதே நேரம் அந்த இடத்திற்கு சிங்கம் ஒன்று இரைத்தேடி வந்து மானை வேட்டையாடியது.

தனக்குத் தேவையான உணவை உண்டுவிட்டு மிச்சத்தை கால்கள் இழந்த நரிக்கு விட்டுச் சென்றது.

மிஞ்சியதை நரி உணவாக உண்டது. இந்த முழு நிகழ்வையும் மரத்திற்கு பின்னால் இருந்து பார்த்துக் கொண்டிருந்த இளைஞனுக்கு ஒன்று புரிந்தது. இரண்டு கால்களையும் இழந்த நரிக்கும் கூட இறைவன் உணவு படைத்ததை எண்ணி வியந்தான். இனி மேல் நாமும் எதுவும் செய்யத் தேவையில்லை.

இனி எல்லாவற்றையும் இறைவன் பார்த்துக்கொள்வான். எல்லாமே இறைவன் செயல். என் செயல் என்று எதுவும் இல்லை. என்ற முடிவில் உறுதியாக இருந்தான்.

கொஞ்ச நாட்களில் விறகு வெட்டுவதை நிறுத்திக் கொண்டான். ஊருக்கு எல்லையில் இருக்கும் ஒரு கல் மண்டபத்தில் எதுவுமே செய்யாமல் இறைவனை மட்டும் நினைத்து கொண்டு அமைதியாக இருக்க தொடங்கினான்.

இனி உணவைத் தேடி எங்கும் செல்வதில்லை என்ற முடிவுக்கு வந்தான். தனக்குத் தேவையான உணவை எப்படியும் இறைவன் வழங்குவான் என்று மிகவும் நம்பிக்கையோடு காத்திருந்தான்.

அவனுக்கு ஓரிரு நாட்கள் ஒரு வேளை உணவு கிடைத்தது. அடுத்த சில நாட்களில் அந்த ஒருவேளை உணவும் கிடைக்கவில்லை. மிகவும் மெலிந்து போனான். நடப்பதற்கு கூட சக்தியற்ற நிலையில் இருந்தான்.

ஆனாலும் இறைவன் எப்படியும் தனக்கு தேவையான உணவை வழங்கியே தீருவான் என்ற நம்பிக்கையில் பிடிவாதமாக படுத்துக் கிடந்தான்.

நாட்கள் கழிந்தன தனது இறுதி நாட்களை நெருங்கிய அவனை ஞானி எதேர்ச்சையாக சந்தித்தார்.

Registration Number of the
Registered News Paper TNTAM/2014/57698 |
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the
Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003.
Tamilnadu. India. Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press,
08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

ஏனப்பா ஏன்? இப்படி உடல் இவ்வளவு சுகவீனம் அடைந்திருக்கிறாய்? என்ன காரணம்?" என்று கேட்டார் ஞானி.

காட்டில் தான் கண்ட காட்சியான, சிங்கம் மானை வேட்டையாடி இரண்டு கால்களையும் இழந்த நரிக்கு உணவளித்த நிகழ்வை சொல்லி முடித்தான்.

ஞானியிடம் "கால்களை இழந்த நரிக்கு உணவு அளித்த இறைவன் எனக்கு ஏன் உணவு அளிக்கவில்லை. நான் என்ன தவறு செய்தேன். நானும் இறைவனைத் தானே சரணடைந்தேன். இனியும் நான் என்ன பாடம் கற்க வேண்டும்" என்றான்.

"நீ பாடம் கற்க வேண்டியது மானை வேட்டையாடிய சிங்கத்திடமும் இரண்டு கால்களையும் இழந்த நரியிடமும் தான்' என்றார் ஞானி .

புரிந்து கொள்ள முடியவில்லையே என்று கண்ணீர்விட்டு தனது இறுதி நொடிகளை எண்ணிக்கொண்டிருந்தான் இளைஞன்.

இளைஞனின் மனதை ஊடுருவி உணர்ந்த ஞானி, சிங்கத்திடமிருந்து நீ கற்க வேண்டிய பாடம் உனக்கு தேவையான உணவை உன் முயற்சியால் பெறுவதோடு மிச்சம் இருப்பதை உழைக்க முடியாத நிலையில் இருப்பவர்களுக்கு வழங்க வேண்டும் என்பதையும், நரியிடம் இருந்து இரண்டு கால்களை இழந்த நிலையிலும் கூட தன்னால் முடிந்த அளவிற்கு விடாமுயற்சியுடன் இரையை தேடும் முயற்சியையும் தான் கற்றுக்கொள்ள வேண்டும்' என்றார் ஞானி.

இளைஞனின் மண்டைக்குள் சுளீரென்று சரணாகதியின் உண்மை பொருள் என்னவென்று உரைத்தது.

இளைஞனும் தன்னுடைய இறுகி நொடிகளில் இருந்தபோதும் தத்தித்தத்தி நரியைப் போல இரைத் தேட முயன்றான்.

அவனுக்கு தேவையான உணவைத் தருவதற்காக காத்திருந்தார் சிங்கத்தைப் போல் ஞானி.

சரணாகதி தத்துவத்தை உள்வாங்கி உணர்ந்த இளைஞன் மீண்டும் தனது கோடாலியை எடுத்து கூர்மைப்படுத்திக்கொண்டு தனது வழக்கமான பணியான விறகு வெட்டுவதற்கு காட்டிற்குச் சென்றான்.

**மனதிடம் சரணாகதி அடைவது விடுதலையைத் தரும். புறச் செயல்பாட்டில் சரணாகதி அடைவது ஒரு போதும் வளர்ச்சியை தராது.**